பீஷ்மர் பாண்டவர்களையும் திருதராஷ்டிரன்முதலானவேண்டினவர்களெல்லாரையும்பார்த்து, "நான் உயிரை விடப்போகிறேன். அதற்கு நீங்கள் அநுமதிகொடுக்கவேண்டும். நீங்கள் ஸத்யத்திற்கே முயலவேண்டும். ஸத்யந்தான் சிறந்தபலம். எப்போதும்மனத்தையடக்கித் தயையை முக்கியமாகக்கொண்டிருக்கவேண்டும். பாரதர்களே! பிராம்மணர்களிடத்தில் அன்புவைத்துத் தர்மத்தையும் தவத்தையும் ஒருபோதும் விடாமலிருக்கவேண்டும்" என்றுசொன்னார். ஜனமேஜயராஜரே! புத்திமானனபீஷ்மர் இவ்வாறுசொல்லி. வேண்டினவர்களெல்லாரையும்பூஜித்துப்பிராம்மணர்களுக்கு அனேகவிதமான தனங்களைக்கொடுத்துத் தர்மராஜரைநோக்கி, "ராஜனே! நீ பிராம்மணர்களையும் முக்கியமாகஅறிஞர்களையும் ஆசார்யர்களையும் ரித்விக்குக்களையும் எப்போதும் பூஜிக்கவேண்டும்" என்றுசொன்னார்.

---

## இருநூற்றெழுபத்துநான்காவது அத்யாயம்.

## பீஷ்மஸ்வர்க்காரோஹணபாவம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர்ஸ்வர்க்கம்சென்றதும்,அவர் உத்தரக்ரியைகளும், கங்கைபுலம்பியதும், க்ருஷ்ணர்தேற்றியதும்.)

வீரரானஜனமேஜயரே! கௌரவரும் சந்தனுபுத்ரருமானபீஷ்மர் கௌரவர்களெல்லாருக்கும் இவ்வாறுசொல்லிச் சற்றுநேரம் பேசாமலிருந்தார்; கிரமப்படி த்யானத்தில் மனத்தைநிறுத்தினார். மகாத்மாவின் அடக்கப்பட்டமூச்சு மேலநோக்கிச்சென்றது. பிரபுவே! வ்யாஸர்முதலானரிஷிகளுடன்சேர்ந்த அந்தமகாத்மாக்களின் நடுவில் அது ஓர் ஆச்சரியமாயிருந்தது. த்யானத்திலிருந்த பீஷ்மர் எந்தெந்தஅவயவத்தை முறையேவிட்டாரோ அந்தஅந்த அவயவங்களில் அம்புகளில்லாமற்போயின. அவர்கள்பார்த்திருக்கும்போதே ஒருநொடியில் அவருக்குப் பாணங்களே இல்லாமற்போயின. ராஜரே! வ்யாஸர்முதலான ரிஷிகளனைவரும் வாஸுதேவர்முதலானவர்களும் அதைக்கண்டு ஆச்சரியமடைந்தனர். அவரால் எல்லாஇடங்களிலும் அடக்கப்பட்ட பிராணனனது தலையைப்பிளந்துகொண்டு சென்றது. அவருடைய ஆத்மா ஸ்வர்க்கத்திற்குக் கிளம்பிற்று; தேவதுந்துபிகள் முழங்கின; பூமாரிபெய்தது. ஸித்தர்களும் பிரம்மரிஷிகளும் மகிழ்ந்து, 'நல்லது! நல்லது' என்றுகூறினர். ராஜரே! பெரியஅக்னிஜ்வாலைபோன்றதோர்ஒளி பீஷ்மர்தலையிலிருந்துபுறப்பட்டு ஆகாயத்தில்

பிரவேசித்து ஒருநொடியில் மறைந்தது ஜ்ரேஷ்டரோ சந்தனு புத்திரரும் பரதவம்சத்தில்சிறந்தவரும் அரசருமான அந்தபீஷ்மர் இவ்வாறு தமதுவஸுலோகத்திற்சேர்ந்தார். கௌரவரே ! அதன் பிறகு, மகாத்மாக்களானபாண்டவர்களும் விதுரரும் யுயுத்ஸுவும் பலசந்தனக்கட்டைகளையும் பலவிதவாஸனைகளையும் கொண்டுவந்து சிதைசெய்தார்கள்; மற்றவர்கள் பார்த்துக்கொண்டிருந்தனர். யுதிஷ்டிரரும் திருதராஷ்டிரனும் அழுதுகொண்டு பட்டுக்களாலும் பூமாலைகளாலும் கௌரவரானபீஷ்மரை மூடினர். யுயுத்ஸு அவருக்கு உயர்ந்தகுடைபிடித்தான். பீமஸேனன் அர்ஜுனன் இருவரும் இரண்டுவெண்சாமரங்கள் வீசினர்; நகுலஸகதேவர்கள் இருவரும் கிரீடம்வைத்தனர்; திருதராஷ்டிரன் யுதிஷ்டிரரோடுசேர்ந்து காலண்டையிருந்தான். பிராயமுதிர்ந்தகௌரவஸ்திரீகள் குருவம்சத்திற்கு ஷ்ரேஷ்டரான பீஷ்மருக்கு நாலுபக்கங்களிலும் விசிறிகளையெடுத்துக் கொண்டு விசிறினர். அதன்பிறகு, அந்தமகாத்மாவுக்குப் பித்ருமேதமென்னும் ஸம்ஸ்காரத்தைச் சாஸ்திரப்படிசெய்தனர். ரித்விக்குக்கள் அக்நியில் ஹோமம்செய்தனர். ஸாமகர்கள் ஸாமங்களைப் பாடினர். பிறகு, சந்தனக்கட்டைகளாலும் மரமஞ்சளாலும் காரகில்முதலான கட்டைகளாலும் பலவாஸனைகளாலும் பீஷ்மரை மறைத்துத் தீமூட்டித் திருதராஷ்டிரன்முதலானவர்கள் அந்தச்சிதையை அபஸவ்யமாகச்சுற்றினர். கௌரவஷ்ரேஷ்டர்கள் கௌரவஷ்ரேஷ்டரானபீஷ்மருக்கு ஸம்ஸ்காரம்செய்து, வ்யாஸரும் நாரதரும் அஸிதரும் வாஸுதேவரும் பரதவம்சத்துஸ்திரீகளும் வந்திருந்தபட்டணத்துஜனங்களும் பின்செல்ல, ரிஷிகளால் அடையப்பட்டதும் புண்ணியமுமானகங்கைக்குச் சென்றனர். அந்தக்ஷத்திரியஷ்ரேஷ்டர்களனைவரும் அந்த ஜனங்களெல்லாரும் மகாத்மாவானபீஷ்மருக்கு விதிப்படி ஜலதர்ப்பணம்செய்தனர். அப்போது, கங்காதேவியானவள் தன்பிள்ளைக்குஜலம் விட்டவுடன், துயரந்தாங்காமல் அந்தஜலத்திலிருந்துஎழுந்து அழுது புலம்பிக்கொண்டு கௌரவர்களைப்பார்த்துச் சொல்லலானாள். 'அரசர்களே ! நான் நடந்தபடி சொல்வதைக் கேளுங்கள். இவன் அரசஒழுக்கத்திலும் அறிவிலும் குலத்திலும் சிறந்தவன் ; கௌரவவம்சத்துப் பெரியோர்களைப் பூஜிப்பவன் ; பித்ருபக்தியுள்ளவன் ; எடுத்தவிரதத்தை விடாதவன்; பரசுராமர் முற்காலத்தில் சிறந்த அஸ்த்ரங்களைப் பிரயோகித்தும்வெல்லமுடியாதமகாவீரன். அவன் இப்போதுசிகண்டியினால் கொல்லப்பட்டான். அரசர்களே ! என்மனம் எஃகினாற்செய்யப்பட்டிருக்கிறது ; திண்ணம். என் அன்புள்ளபுத்திரனைப்பாரமம

ருந்தும் அது வெடித்துப்போகவில்லையே. காசிப்பட்டணத்தில் வயம்வரத்திற்காகச்சேர்ந்திருந்த க்ஷத்திரியஜாதியான அரசர்களை வன் ஒருதேராளியாகி யுத்தத்தில் ஜயித்துக் கன்னிகைகளைக் கொண்டுவந்தான். பலத்தில் இவனுக்குச்சரியானவன் பூமிமுழுமை லும் எவனுமில்லை. அவன் சிகண்டியினால்கொல்லப்பட்டதைக் கட்டும் என்மனம் வெடிக்கவில்லையே. இந்தமகாத்மாவினால் பரசு ராமர் குருக்ஷேத்திரத்தில் அதிகப்பிரயாஸமில்லாமலே யுத்தத்தில் பீடிக்கப்பட்டார். அவன் இப்பொழுது சிகண்டியினால் கொல்லப்பட் டான்' என்றாள். அப்போது, இவ்வாறு மிகுதியாகப்புலம்பும் அம் காநதியைப் பிரபுவான வாஸுதேவர் இன்சொல்லினால் தேற்றினார். சிறந்தவளே! தைரியப்படுத்திக்கொள். காட்சிக்கினியவளே! யரப்படாதே. உன்னுடையஅந்தச்சிறந்தபுத்திரர் மேலானஉலகத் ற்குப் போனார். ஸந்தேகமில்லை. சிறந்தவளே! மிகுந்தபராக்கிரம ாலியான அவர் வஸுவாயிருப்பவர்; சாபதோஷத்தினால் மானிட ஜன்மத்தையடைந்தவர். அவரைப்பற்றி நீ துயரப்படவேண்டாம். தேவியே! அவர் க்ஷத்திரியதர்மத்தைப்பற்றிப் போர்க்களத்தில் த்தம்செய்து தனஞ்சயனால் கொல்லப்பட்டார்; சிகண்டியினால் கால்லப்படவில்லை. பெரும்போரில் பாணத்தையெடுத்துக்கொண் ருக்கும் கௌரவப்புலியான பீஷ்மரையடிப்பதற்குத் தேவேந் ரனே நேரில் வந்தாலும் முடியாது. அழகியமுகமுள்ளவளே! உன் தல்வர் தம்மிச்சையினால ஸ்வர்க்கம்சென்றார். எல்லாத்தேவர்களும் சர்ந்தாலும் யுத்தத்தில் அவரைக்கொல்லமுடியாதன்றோ! நதிகளிற் றந்தவளே! ஆதலால், அந்தக் கௌரவஶ்ரேஷ்டரைப்பற்றி நீ துய ப்படாதே. தேவியே! உன்னுடைய இந்தப்புத்திரர் வஸுக்களைச் சேர்ந்து விட்டார். துயரமற்றிரு' என்றார்.

மகாராஜரே! கிருஷ்ணனாலும் வ்யாஸராலும் இவ்வாறு சொல் ப்பட்ட அந்தக் கங்காதேவி துயரத்தைவிட்டுத் தன்ஜலத்திற்குள் றங்கினாள். அரசரே! அந்தவாஸுதேவர்முதலான அரசரனைவரும் அந்தக்கங்காதேவியைப் பூஜித்து அவளால் விடைகொடுக்கப்பெற் த் திரும்பிச்சென்றனர்" என்றார்.

பீஷ்மஸ்வர்க்காரோஹணபர்வம் முற்றிற்று.

---

அநுசாஸனபர்வம் முற்றிற்று.